# எந்நூலுக்கும் இந்நூலே மூலம்

(எட்டாவது அத்தியாயம்)

# பூதலோகம்



ஞானவள்ளல்

**பரஞ்ஜோதி மஹான்**

அருளியது.

பரிபூரண பரஞ்ஜோதியின்

**உயர்ஞான சபையோரால்**

வெளியிடப்பட்டது.



...ராஜேஸ்வரி பிரஸில்
...பிக்கப்பட்டது.

# கவனிப்பு.

---

உலக நல்லடியார்களே! பரிபூரண பரஞ்ஜோதியின் உயர் ஞான சபை, ஞான வள்ளல் பரஞ்ஜோதி மஹான் அவர்களால் மதுரையில் ஸ்தாபிக்கப்பெற்று, 1942ஞு மேமீ 18உ 1860 வருஷத்திய (Societies Act XXI) சட்டப்படி ரிஜிஸ்தர் செய்யப்பெற்றது. நன்மைக்கு ஆளாவோர் நாளுக்கு நாள் பெருகி, பல ஊர்களில் கிளைச் சபைகளும் ஏற்பட்டுள்ளன. சென்னையில் மூன்று சபைகளும், பம்பாயில் ஒரு சபையும், அருப்புக்கோட்டையில் இரு சபைகளும், பெரியகுளத்தில் ஒரு சபையும், சின்னாளப்பட்டியில் ஒரு சபையும், இதுவரை நிறுவப்பெற்றுள்ளன.

தன்னைத்தான் அறிந்து, தன் சக்தியை அபிவிருத்தி செய்து, அன்றாட வாழ்க்கையில் பிரயோகித்து, பேரின்பமாய் பிறவியின் பெரும் நோக்கை முடித்து, ஐக்கிய முத்தியடைவது இச்சபையின் நோக்கம்.

"இருளே பூரணம் — உயிர் இருப்பது இருளில் — உயிராயிருப்பது நினைவு — உயிரின் ஒத்தாசையாயுள்ளது தன் தொனி — உயிரின் பொருளாயுள்ளது அக்கினி அல்லது ஜோதி — உயிரின் நிர்வாகி அறிவு — அடக்கமும் அணுவில் விரிந்ததும் அணுவால் — அறிந்ததும் அணுவினுள் ஆதி மெய்யுணர்வால்" என்பது இச்சபையின் தத்துவம்.

25 வயதிற்குமேல் 70 வயதுக்குட்பட்டவர்கள் பெரிதும் இல்லற வாசிகளாயும், திடகாத்திர மேனி உள்ளவராயும், சரீர தீங்கற்றவராயும் இருந்து, சபையின்

10 நிபந்தனைகளின்படி நடந்துகொள்பவர்கள் இச்சபையில் அங்கத்தினர்களாகச் சேரலாம்.

அறிவாளிகளே! அறிவைக்கடந்த, தன்னிலை யடைந்துகொள்ளுங்கள்.

நல்லடியார்களே! தன்னிலையடைந்து தன்னறிவைப் பிரகாசித்துக்கொள்ளுங்கள்.

இங்ஙனம்,

பரிபூர்ண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபையார், மதுரை.

B. சுந்தரராஜன்,

காரியதரிசி.

5-6

# பூதலோகம்.

---

பட்டேன் படாத பாடெல்லாம் பட்டேன்
　பலன் லோகாதி லோகங்களெல்லாம் பார்த்தேன்
எல்லா லோகங்களும் என் லோகந்தான்
　படியாத பாஷை ஒன்றுமில்லை; படித்துப்பாடும்
பாஷையெல்லாம் என் பாஷை தான்.

அறியவேண்டிய பொருளெல்லாம் அறிந்தேன்
　ஆகியிருக்கும் பொருளெல்லாம் என்பொருளே தான்
உடலால் சென்றேன்; உடலுள்ளால் சென்றேன்
　உள்ளுள்ள உணர்வறிவால் சென்றேன்
இங்கும் சென்றேன் அங்கும் சென்றேன்
　எங்கும் நிறைந்தவன் நான் ஒருவனே.

இந்த லோகம் பூமிக்குச் சிறிது அப்பால் உள்ளது. இதில் உள்ள ஆத்துமாக்கள் சுமார் ஒன்னரை பனை உயரத்திற்குள் அதாவது எண்பது அல்லது தொண்ணூறு அடி உயரத்திற்குள் உலாவுவார்கள். இது மனித சரீரங்கள் ஆகி வெகு காலத்திற்குப் பின், அறிவின் அபிவிருத்திக்கிடையிலும், ஆசையின் பற்றுதலுக்குப் பின்னும் ஏற்பட்டது. மனித சரீரம் எடுத்தெடுத்து இறந்த பின்னர், கொடிய குணத்தின் சூக்கும சரீரம் இந்த லோகத்தில் தங்குகிறது. இவைகளுக்குப் பேர் பேய், பைசாசு, முனி, சாத்தான், ஜின், தேவதைகள் எனப்படும். இவைகளில் படிப்படியாய் தாழ்வு, உயர்வு உண்டு. இவர்களின் கூட்டத்திற்குத் தலைவர்கள் உண்டு. தலைவர்கள் சொற்படி கூட்டத்தினர் காரியங்களை முடிப்பர்.

## பேயாவது யார்?

மனித சரீரத்தில் இருக்கும்போது கொடிய நயவஞ்சக துரோகிகளாயிருந்தவர்களும், அநேக பொருள்களைச் சம்பாதித்து, அவைகளை அநுபவிக்காமல் புதைத்து மறைத்து வைத்திருந்தவர்களும், தம் மனமார சரீரத்தில், மனம் கேட்டபடி இச்சையிருந்தும், அதை அநுபவியாமல் இறந்தவர்களும், தற்கொலை செய்து கொண்டவர்களும், அநேக பேருக்கு மனஹிம்சை செய்தவர்களும், வன்னெஞ்சத்தவர்களும், ஒரு வஸ்துவின் பேரில் அழுத்தமான இச்சை வைத்திருக்கும் சிறு மனதுடையவர்களும், பெரும் படிப்பாளிகளாகி அதில் நயவஞ்சகத்தவர்களும், மக்களை ஏமாற்றுபவர்களும், உறுதியிலே நிலைத்து, அவ்வுறுதிக்கு மேல் உறுதியடையாமல், மாறிக்கொள்ளும் சலனபுத்தியுடையவர்களும், ராஜவிசுவாசத்தில் பேதமித்த போர் வீரர்களும், அசந்தர்ப்பமாய் வெட்டுப்பட்டு அபாயமாய் இறந்தவர்களும், பேதகுண சச்சரவு உள்ள பெண்களுமாகிய இவர்களே பைசாசாகின்றனர்.

பைசாசு என்பது சரீரம் உள்ளபோது செய்த சேஷ்டைகளை தன் அரூபா ரூப வாயிலாக சிறிது காலம் செய்து முடிப்பதேயாகும்.

இவைகளின் சரீரம் ஊதா, மயில், துத்தம் போன்ற நிறமுடையது. இதிலும் கொஞ்சம் நல்லவர்கள் சிறிது வெள்ளை நிறமாக இருப்பார்கள். இவர்களுடைய உடம்பில் கால் தெரிபவராது. பூமிக்குச் சுமார் 1 அடி முதல்

4 அடி உயரத்திற்குமேல் உலாவுவார்கள். இவர்கள் உடையோடு தெரிந்தாலும் இவர்களுக்கு உடை கிடையாது. இவர்கள் தோன்றினால் மூன்று நிமிஷங்களிலிருந்து கால் மணிக்கு மேல் நிலைக்கமாட்டார்கள்.

## இவர்கள் யாரிடம் தோன்றமாட்டார்கள்?

நல்லடியார்கள் முன்னும், கண்கள் இமையாமல் விழித்த பார்வையுடையவர்கள் முன்னும், பக்தர்கள் முன்னும், நிடசித்தத் துணிவு உடையவர்கள் முன்னும், சக்கரங்கள் உள்ள ஓடும் வாகனங்களில் செல்பவர்கள் முன்னும், இவர்கள் பயந்து தோன்றமாட்டார்கள். மற்றவர்களைப் பயப்படுத்துவார்கள். அந்த பயத்தில் அகீப்பட்டவர்களின் கதி பலவாறு இருக்கின்றது. அதை சொன்னால் விரியும்.

## இவைகளுக்குப் பிரீதி.

பூ, சாம்பிராணி, புகை, மாமிசத்தின் சுவைகள், மற்றும் பதார்த்தங்களிலுள்ள சுவைகள், பெண்கள் மீது மோகம், முதலியவைகளில் இவைகளுக்குப் பிரியம் அதிகம். இவர்களால் பயப்படுத்தப்பட்டு, அதே காரணத்தால் இறந்து விட்டவர்களைத் தங்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொள்வார்கள். இவர்கள் எல்லா இடங்களிலும் உலாவுவார்கள். இவர்களுடைய நேரம், நடு இரவிலிருந்து விடிவெள்ளி தெரியும் வரையிலும், சூரியன் அஸ்தமனமாகி 1½ நாழிகை வரையிலும், நடுப்பகலிலிருந்து 2½ மணிவரைக்கும் ஆகும். இந்நேரங்களில் முக்கியமாய் தோன்றுவார்கள். மற்ற நேரங்களிலும் தோன்றி பயப்படுத்தவும் கூடும்.

இவர்களேயும் உலக மக்கள் வசப்படுத்தி, சில காரியங்களைச் செய்து முடிப்பர், இவர்களிடம் கொஞ்சம் ஏமார்ந்தால் அவர்களேயும் கொன்று தங்கள் கூட்டத்தில் சேர்த்துக்கொள்வர்.

அது எதைப்போன்றுஎன்றால், உலகநல்லடியார்களே! அறிவின் அனுபோகப்பெருக்கில் அறிவை அறிய முற்படும் மதவேத கொள்கைகளை அடக்கியாளும் அறிவுடையோர்கள், மதவேத வேதாந்தங்களின் பாசாங்க வின் இரக்கத்திற்கு ஆளாகாதபடி மேல் நிலையடைந்தோர் அறிவாளியாவார்கள். தன் அறிவினுடைய அனுபோகமிருந்தும், வேதாந்தத்திற்கு இசைந்தார்களானுல் இவர்கள் கதியும் அதைப்போன்றே. ஆகையால் தான் குழிக்குள் பதுங்கிப் பார்ப்பதைவிட மிக உயரக்கோபுரத்தில் ஏறிப் பார்ப்பதுவே மேல்நிலையாகும். சம நிலையுமாகும். அதனுல் தான்;

மதமுடையோர் மதியடைவோர்
மதங் கடந்தோர் மதியுடையோர்
மதியுடையோர் விதிகடந்தோர்
விதிகடந்தோர் விண்ணில் அவனே;

என்று சொல்லி இருக்கிறேன். மற்றொரு சமயத்தில் பெரும்படிப்பால், படித்த அளவு உங்களைவிட்டு நீங்கள் வெகு தொலைவு விலகிக்கொள்ளாதீர்கள். படித்த பலன் உங்களில் நீங்கள் நெருங்கிக் கொள்ளுங்கள் என்றும்,

தர்க்க முடையோன் தாழ்த்தப்படுவோன்
தர்க்க முடையோன் தவநிலையுடையான்
தர்க்க முடையோன் தன்னறிவறியான்
ர்க்க முடையோன் தன்னிலையடையான்

என்றும் சொல்லியிருக்கின்றேன். உலக நல்லடியார்களே! தன்னறிவு பெருக்கமும், தன் திட சித்தமும் வேண்டும்.

அரசும் வேம்பும் பின்னி வளர்ந்தாலும் சுவை, தோற்றம் மாறாதது போல் அறிவினிடம் அண்டியும் துவேஷ வேசிகுணங்களை மாற்றாமல் இருந்திடாதீர்கள்.

பெரும்பதம் அடையவந்த பெரியோர்களுக்கு அப்பதம் அளித்து சிறு குண வணக்கங்களை விடு என்று சொல்லும் சிறப்புச் சொல்லைக் கிரகிக்காதவர் யாரோ அவர், தன் பிறவி நயவஞ்சகராவர்.

சுவாமி! குரோதமும் கோபமும் எப்போது போகும்? அப்பா நல்ல கேள்வி, — உணரும்போது.

மெய்யுணர்வாளர்களே! மாவும் தென்னையும் ஒன்றாய் வளர்ந்தால், தென்னை உயரும், மா படரும். அதைப்போல் அன்பில் பரவி, அறிவில் உயர்ந்திருங்கள்.

குற்றம் செய்து செய்து, இனியும் குற்றம் செய்வேன் என்று கும்பிடுவதைவிட குற்றம் செய்ததை உணர்ந்து, இனி குற்றம் செய்யேன் என்று கும்பிடுவது மேல். அதற்கும் மேல் குற்றம் செய்யாதிருந்து, இனி குற்றம் வந்து சாராதிருக்கக் கும்பிடுவது. அதற்கும் மேலினும் மேல், எதிலும் அறிவோடிருந்து தன்னிலையடையவேண்டுமென்று கும்பிடும் கும்பிடே மேலினும் மேலாகும்.

எதிலும் துணிவாயிரு, எங்கும் நிறைவாயிருப்பாய்,
எதிலும் அன்பாயிரு, எங்கும் ஜெயமாயிருப்பாய்,
எதிலும் அறிவாயிரு, எதையும் வணங்காதிருப்பாய்,
எதிலும் அரித நிதானத்தில் இரு, உன்னில் நீ யடை
[வாய்

ஆகையால் உலக நல்லடியார்களே! சலனம் வேண்டாம்.

## நிரமரணத்தால் வீர சொர்க்கம்.

யுத்தத்தில் இறந்தவர்கள் மட்டும் எல்லோரும் பேயாவது இல்லை. ஏன்? யுத்தராக முழக்கத்திலும், இராஜ விசுவாச அபிமானத்தைக்கொண்டும், ஒரே நிரத்துடன் மாண்டுவிடுவதால் இவர்கள் அடையும் மேல் பலன் நல்ல நிரமறதியிலிருந்து, அதே நிர தைரியசாலியாகவே உலகத்தில் பிறக்கின்றூர்கள். அந்த நிர தைரியத்துடன் இருக்குமிடத்திற்குத்தான் சூக்கும லோகமென்றும், வீரசொர்க்கமென்றும் சொல்லுவது. இதை "ஒரு மொழி"யில் பார்க்கவும். இவர்களுக்கு அறிவின் அபிவிருத்தியும், நிடசித்தமும் அதிகம். யுத்தத்தில் இறந்தவர்கள் 1000-க்கு 2 பேர் பைசாசாகிக் கொள்வதுமுண்டு.

## யுத்தத்தால் நன்மை.

சுமார் 20 வருஷத்திற்கு ஒரு முறையாவது, 30 வருஷத்திற்கு ஒரு முறையாவது யுத்தம் நடந்தே தீரவேண்டும். அதில் அறிவின் உயர்வும், புதிய ஆராய்ச்சி நுட்பங்களும், சுறுசுறுப்புத்துரிதமும், புது சீர்திருத்தங்களும், புதிய தொழில் முறைகளும், உலக சுத்தமும், மன சமாதானமும் ஏற்படும்.

பெரியோர்களை அண்டியும், சலன முடையவர்களும், பொறுமை நிதானம் இல்லாதவர்களும் எதைப் போன்று என்றால்;

கொதி பொறுக்கா விளைவு, பிடி பொறுக்கா முருங்கை,
மிதி பொறுக்கா நிலம், சொற் பொறுக்கா மனைவி,
கனம் பொறுக்கா அச்சு, அடி பொறுக்கா மேளம்,
காற்று பொறுக்கா வெளிச்சம், மோகம் பொறுக்கா வீரம்
போன்றும்,

முறுக்காக்கயிறு, பெருக்காக் குப்பை,
கடக்கா காவல், செரிக்கா வயிறு,
மறுக்காபிழை, உருக்கா நெய்,
வெறுக்காக்குடி, பொறுக்காக் கோபம்
போலுமாம். ஆகையால் உறுதியுடையோர்கள் எப்படி இருக்கவேண்டுமென்றால்:—

உறவுக்கஞ்சா உண்மை, வெப்புக்கஞ்சா இரும்பு,
கட்டுக்கஞ்சா பிரம்பு, தப்புக்கஞ்சா தீர்ப்பு,
உப்புக்கஞ்சா ஜாடி, இறைப்புக்கஞ்சா ஊற்று,
உயிருக்கஞ்சா வீரபோர், மரத்திற்கஞ்சா மேல் அறிவு
போல்,

தைரிய முடையோன் தடாள முடையோன்
தைரிய முடையோன் தன்னறிவடைவோன
தைரிய முடையோன் தன்பிறவி முடிப்போன்
தைரிய முடையோன் தலைவனுவான்.

## பைசாசின் சரீரத்திற்கு வயது.

சரீரத்தை விட்டு மறைந்த தேதியிலிருந்து சுமார் 70 அல்லது 85 வயது வரைக்கும் பைசாசாகவே இருக்கலாம். ஆனால் எந்த பைசாசும் 40 அல்லது 60 வருஷத்திற்குமேல் தன் சேட்டையை உலக மக்களிடம் செய்யவே முடியாது. பின் பைசாசாக உள்ள சிறிது ஸூதா ரங்கைவிட்டு விலகி, ஸூக்ஷும சரீர லோகத்திற்கு மறதிக்குப் போய்விடும். அங்கு கொஞ்ச காலம் சலன மறதியிலிருந்து பின் சரீரம் எடுக்கிறார்கள். இதிலும் கொஞ்சம் உணர்ந்த பைசாசு அதிக காலம் பூதலோகத்தில் தங்குவதில்லை.

## இவர்களைப் பார்க்கும் உபாயம்.

பெரும் ஆசா பாசத்தில் இறந்தவர்களாயிருந்தால் மனித சரீரத்தைவிட்ட இடத்திலேயே தான் விலகிய சரீரத்திற்கு சுமார் ஒரு கெஜத்திற்கு மேல் ஸூதா பளிங்கு நிறமாகப் பார்க்கலாம். பார்க்க விரும்புவோர் சிறிது தொலையிலிருந்து இமையாதபடி கூர்ந்து கவனித்தால் தெரியவரும். மேலும், அவை அச்சரீரத்தைக் கொண்டு போகும் பெட்டி, தேர், இவைகள் கூடவே சமீபத்தில் வருவதைக் காணலாம். மண்ணில் புதைக்கும் போதும், சுட்டு எரிக்கும் போதும் விலகி நிற்கும். பின், மரணித்த இடத்திலும், சிறிதளவு தான் உலாவி இருந்த இடத்திலும் சுமார் 40 நாள் வரையிலும் இருக்கும். ஆகையால் இவ்விடத்தில் விளக்கு இருப்பது மிகவும் நல்லது. விளக்கிருந்தால் அவ்விடத்தில் அதிக நாள் நீடித்திருக்கமாட்டார்கள்.

சிறிது நல்ல ஆத்துமாக்கள் அவ்விடத்தில் மூன்று நாளைக்குமேல் நீடித்திருக்கமாட்டார்கள். பெரும் நல்ல ஆத்துமாக்கள் அசுஷணமே விலகி சூக்கும லோகம் போய் சேருகிறார்கள். இந்த புஸ்தகத்தைப் படிக்கும் பெண்களும், அறிவின் திட சித்தத்தின் பெருக்கம் குறைந்திருக்கும் ஆண்களும், மேற்படி பைசாசுகளைப் பார்க்க முற்படவே கூடாது.

## இவர்களுக்குப் பயம்.

கண் விழிப்புக்கும், பெரும் வெளிச்சத்திற்கும், துப்பாக்கி வேட்டிற்கும், அரசாங்க முத்திரைக்கும், அறிவாளிகளின் வாக்குகளுக்கும், ஆக்கினைகளுக்கும், இச்சபை ஆக்ஞை முத்திரைக்கும், விலகிக் கொள்வார்கள். சில மந்திரவாதிகளின் மந்திர சக்தியால் சிறு பைசாசுகளும் போகக்கூடும்.

## இவர்கள் அண்டாதவர்கள்.

சரீர ஒழுக்கமுள்ள பெண்களிடமும், மானம் மரியாதை கற்பு ஒழுக்கமுள்ள பெண்களிடமும், வீர சொற்கள், கூர்ந்த பார்வையுடையவர்களிடமும், திட சித்தமுள்ள பெண்களிடமும், அண்டவே மாட்டார்கள். மெய்யுணர்வாளர்களே! நீங்கள் உணர்வோடிருக்கும் போது 40 கெஜம் சுற்றளவுக்கு நெருங்கமாட்டார்கள்.

## இவர்கள் அண்டக்கூடியவர்கள்.

சலனப் புத்தியுடையோர், சந்தேகம் அநேக முடையோர், எடுத்ததற்கெல்லாம் பயப்படக் கூடியவர், சரீரத்

தில் அதிக ரோமமுடைய பெண்கள், முழங்கால் நீண்ட பெண்கள், கண்களில் பூதத்திரை அல்லது சவ்வு உடையோர், சிறு அறிவுடையோர், எதிலும் உண்மை விசுவாசமில்லாதோர் இவர்களிடமே அண்டுவார்கள்.

சுடுகாட்டிற்கு அருகாமையில் பேய்களின் பயமே ஒழிய, சுடுகாட்டில் பயமே இல்லை. கள்ளன் இருக்கும் ஊர்களில் பயமே ஒழிய, கள்ளன் வீட்டில் தங்கினால் பயமே இல்லை துஷ்டர்களை எதிர்த்தால் பயமே ஒழிய, அவரை அன்பில் சார்ந்தால் பயமே இல்லை.

## இவர்களிடமிருந்து பாதுகாப்பு.

நல்ல உணவு ஆகாரங்களை தனிப்பட கொண்டு போகும் இடங்களிலும், படுக்கையறையில் தனிப்பட பயப்படக்கூடிய பெண் படுத்திருந்தால் அவர் சமீபத்திலும், சாதாரணமாக குடும்பங்களில் பயங்கரமான இடங்களிலும், படுக்கையறைகளிலும் அடுப்புக்கரித் துண்டு பக்கத்தில் வைத்துக்கொள்ளவும்.

## உடலைவிட்ட ஆத்துமாக்கள் உடம்பிலுள்ள ஆத்துமாக்களுக்குச் செய்யும் தொந்தரவுகள் அல்லது பைசாசுகள் மனிததேகத்தில் நிர்வாகம் நடத்தல்.

இவர்கள் மனித சரீரத்தில் எப்படி புகுகின்றார்கள்? நல்ல நிலா வெளிச்சங்களிலும், சுத்த நிலவம் பஞ்சு பறந்து வந்தால் எப்படித் தெரிகின்றதோ அதே போல்

தோன்றி, பல உருவங்களாகத் தென்படுவதுண்டு. அப்படி தென்பட்டதும், சரீரத்தில் கூச்சம் ஏற்பட்டவுடன் கண்களை இமையாதிருப்பவர்கள் தப்பித்துக்கொள்ளுவார்கள் கண்களை இமைத்துவிட்டால் அவர்களின் அறிவு தூக்கஸ்தானத்திற்குப் போய்விடுகிறது. அசுசுணமே பைசாசின் அறிவு உட்புகுந்து கொள்ளுகிறது. இது விலகியவுடன் மனித அறிவு நிர்வாகம் நடத்துகிறது. மறுபடி பைசாசு அறிவு புகுந்ததும், மனித அறிவு நித்திரை ஸ்தானத்திற்குப் போய் விடுகின்றது. நித்திரை ஸ்தானம் 'ஞானக் கண்ணில்' பார்க்கவும்.

## பைசாசுகளைப் போக்கும் விபரம்.

இருட்டு அறையில் மூன்று தினம் வைத்தல். பெண்களாயிருந்தால், பிறர் தெரியாதபடி தகுந்த சொந்தமுடையோர் வஸ்திரத்தைக் களைதல், சாம்பிராணி புகைகள் போடாதிருத்தல், பைசாசு அறிவாயிருந்து கேட்கும் வஸ்து எதுவும் கொடுக்காதிருத்தல், பிடரியில் அடித்தல், பசியாக வைத்தல், அது என்ன சொன்னாலும் கேளாதிருத்தல். விழிகளைக்கொண்டு கூர்மையாக இமைபாது அதைப் பார்த்தல்.

என் இருதயத்தில் பதிந்த பெண் சிரோன்மணிகளே! உங்களுடைய ஊக்கம், கற்பின் பாதுகாப்புக்கும், உங்களுடைய சந்தோஷம், உலக வினையின் காரணத்திற்கும், இருந்துகொண்டிருக்கின்றது. ஆகையால் பேதகக் குணங்களும், கணவனுக்கு அவமரியாதையும், இந்நூலின் மூலம்

செய்யவேமாட்டீர்கள். பெரியோர் சொல்லைப் பேணி நடப்பது பெண்டிர்க்கழகு.

## உடம்பைவிட்ட ஆத்துமாக்களுக்கு உடம்பிலுள்ள ஆத்துமாக்கள் செய்யும் தொந்தரவுகள்.

அறிவுடையோர்களே! சொல்லும் சொல்லெல்லாம் சிந்தித்து நோக்குங்கால், அறிவுக்கும் சிறப்பாகி நீங்கள் அறியவேண்டியதும் அறிந்து கொள்ளலாம். அறிவின் சிந்தனையால் கவனிக்கவேண்டிய விஷயம் இது. உலகில் பல மதங்கள் சிருஷ்டியாகிறபோது அறிவின் ஒழுக்கத்திற்கும், அன்பின் பெருக்கத்திற்கும், ஒற்றுமையின் சமத்துவத்திற்கும், சிற்சில சட்டதிட்டத்துடன் பரவுகிறது. அம்மத ஸ்தாபகர்களால் எழுதாமலே அவர்களைப் பின்பற்றிய உத்தம பற்றுடைய பக்தரோ, அச்சமயத்தைப் பாதுகாக்கும் சமயாச்சாரிகளோ சிற்சில சடங்குகளைப் பின் ஏற்படுத்துகின்றனர் அதில் வணக்க வைபவங்களிலும், மங்கள காரண காரியங்களிலும், செய்யப்படுகிற சடங்காச்சாரங்கள் சில விஷயங்களில் நன்மைகள் உண்டாக்குகின்றன.

ஒரு மனிதன் சரீரத்தை விட்டபோது அவனுடைய சரீரத்திலிருந்து சத்தியத்திற்கும், அன்பினுடைய நட்பிற்கும் வேண்டிய மரியாதை செய்துகொள்வது அவசியமானாலும், எந்தெந்த வகையில் செய்து கொள்வது என்பது சரீரத்தில் உள்ளபோதேயாகும். அல்லாது போனால் நட்பின் அதிகரிப்புக்கு உண்டான நன்மை விளையாதபடி சிறு

பெரும் தீங்குகளும் விளைவித்துவிடுகின்றன. அது என்னவென்றால் மனித சரீரத்திலுள்ள ஆத்துமாக்களுக்கு சக்தி அதிகமாகவும் மனித சரீரத்தைவிட்ட ஆத்துமாக்களுக்கு சக்தி குறைவாகவும் இருந்து கொண்டிருக்கின்றன. அதில் மனித சரீரத்தைவிட்ட ஆத்துமாக்களுக்கு முக்கியமாக வேண்டியாது, தன் ஓய்வு. அந்த ஓய்வைக் கெடுக்கக் கூடியது மனித சரீரத்திலுள்ள ஆத்துமாக்களின் ஏக்கமே. அப்பேர் பட்டவர்களை உலக மக்கள் அல்லது இன பந்து ஜனங்கள் நினைத்து ஏங்குவதும், அழுவதும், அடிக்கடி ஞாபகத்தை ஊட்டும்படியாக உள்ள கிரிகைகளை அவரவர் மதாச்சாரபபடி செய்தும் வருகிறார்கள். இதனால் அந்த ஆத்துமாக்களுக்கு ஒரு சிறிதளவாவது பிரதி பலன் இல்லாமல் போவதுடன் அவர்களுக்கு தொந்தரவாகவே இருந்து வருகிறது. ஏன்? மறதியில் இருக்கப்பட்டவர்களை இவர்கள் அடிக்கடி நினைப்பதால் இவர்களுடைய ஞாபகசக்தி அவர்களை இலந்தைமுள், கள்ளிமுள் போன்று குத்தி விழிக்கச் செய்கிறது. அப்படி அவர்களுக்கு விழிப் பேற்படுவதால், உலக தொந்தரவைக் காட்டிலும் அதிகத் தொந்தரவுக்கு உரியவர்களாகிறார்கள். அந்த தொந்தரவுகளை சகிக்க முடியாமல் சரீர லோகத்திற்கு வந்து விடலாமென்று வந்துவிட்டாலும், பூரண சுகத்துடனும், மேலான அறிவுடனும் இவர்கள் ஜீவித்திருக்க முடியாது. இதனால், அவர்களுக்கு சில வியாதிகள் ஏற்பட்டு சீக்கிரமே மாணித்துவிடுகிறார்கள். முன் காலங்களில் அறிவு அதிகம் இல்லாமல் இருந்திட்ட போதிலும், ஒருவர் மாணித்தால் மற்றவர்கள் அவரைப்பற்றி ஞாபகிப்பதில்லை. அதனால்

அந்தக் காலங்களில் பிறந்தவர்கள் அதிக வயதுடையவர்களாகவும், வியாதி என்பது தெரியாதவர்களாகவும் இருந்து வந்தார்கள். தற்காலத்தில் வியாதிகளின் அதிகரிப்புக்கு பல காரணங்களில இத்தொந்தரவு அதிகரித்திருப்பதுவும் ஒன்றாகும்.

ஒவ்வொருவர்களும் தங்கள் மத ஒழுக்கப்படி கிரிகைகள் அநேகம் செய்திட்டபோதிலும், இவர்களிடத்தில் அவர்கள் பிறவி எடுக்க சந்தர்ப்பம் இருந்தால் தான் எடுக்கிறார்கள். இந்த சந்தர்ப்பம் இல்லாதபடி ஞாபகிப்பதால், அவர்கள் தொந்தரவுக்குச் சகிக்க முடியாமல் வேறு எந்த இடவசதி இருக்கின்றதோ அங்கே, அவர்கள் பிறவி எடுக்க நேரிடுகின்றது. இந்த இடவசதி கர்ப்பஸ்திரீகளாக இருந்தால் 6 அல்லது 7 மாதத்திலே வந்து நுழைகிறது. 8 மாதத்திற்குப் பின் ஞாபகித்தாலும் அவர்கள் வர வசதியில்லை கர்ப்பம் தரிக்கக் கூடிய சந்தர்ப்பம் இல்லாத இடங்களில் நினைத்தும் பிரயோஜனமில்லை. ஆனதால் சரீரத்தைவிட்ட ஆத்மாக்களை நினைப்பதே கூடாது.

அறிவின் சிறப்புள்ள பெண் சிரோமணிகளே! உங்களால் உலகத்துக்கு அநேக நன்மைகள் ஏற்படவேண்டியதிருப்பதால, மேலெண்ட விஷயங்களை அறவே நினையாதிருப்பதுப், முதாதைகள் சொற்படி நடத்தவேண்டுமென்ற பெரும் விசுவாசம் இருப்பதைக் காட்டிலும் கோடி விசுவாசம் என் சொல்லில் கொள்வீர்களாக. பெண்களின் நினைப்பின் சக்தி பெரும வேகத்தொலையாயுள்ளது. அவ்வேகத் தொலையாகப்பட்டது, அவர்களை

மிக இம்சைப்படுத்துகின்றது. நீங்கள் நினைத்து சாந்தி யடைவதைவிட நினையாமல் சாந்தியடைவது இருவகை யிலும் மேலாயிருக்கின்றது. அது உங்களின் கவலை நோயும், அந்த ஆத்துமாக்களுக்கு ஹிம்சை நோயும் இரண்டும் நீங்குகின்றது. இருவகை என்பது மூவகை யென்றும், பலவகையென்றும் சொல்லலாம். இக்கிரிகை சம்பந்தத்தால் கொடுக்கும் நன்கொடையை வாங்க விரும்பி யுள்ளோர், அக்கிரிகைகள் முடிந்த பின்னும் அப்பேர்ப் பட்ட விஷயாதி விஷயங்கள் மறுபடி எப்போது நடக்கும் என்ற ஏக்கம் குடிகொண்டவர்களாக இருக்கின்றார்கள். அவ்வேக்கமே, பலயீனமாய் நோயாயிருக்கும் ஒருவனைக் கொன்றே விடுகிறது. ஆகையால் அவ்வேக்கம் மிகக் கொடியது.

அக்கிரிகை சம்பந்தமான வம்சத்தவர்கள் இன்றைக்கு சக்தி கலனளித்தது என்ற சந்தோஷத்துடன் கிரிகை சம்பந்தமான நன்கொடைகளை ஆமோதிக்கிறார்கள். அதில் அவர்களும், அவர்களுடைய குடும்பத்தினரும் அவ்வேக் கத்திற்காளாகி, அறிவின் தளர்ச்சியடைந்து அம்மதத்தை அவமரியாதைப்படுத்துவதுமன்றி, ஏழையாகவும், பிறர் கொடையை விரும்பியவர்களாகவும் பிறந்து பரவுகின்றார் கள். சிறு நன்மை பெருந்தின்மைகளை விளைவித்தது. இதில் மனிதனுப் பிறந்து அவன் அனுபவிக்கவேண்டிய திடசித்தத்தை அனுபவிக்கவும் தடையாய் இருந்து கொண்டிருக்கின்றது.

ஒருவேளை ஒருவனைப் பசியாற்றுவதைவிட, அவன் ஆயுள்பரம்பரைக்கும் அறிவோடு பசியாற்றுவது மேல்.

ஆகையால் அவர்களுக்கு நல்ல தொழில் கொடுத்து அறிவின் நன்மையை விளைவியுங்கள்.

என் இருதய மலர்களே! உலகில் பெரும் ஏக்கத்தின் முடிவே மனிதன் மனிதனாகப்பிறந்ததின் பின் அவனுடைய அறிவே உயர்வு தாழ்வுக்குக் காரணமாக இருக்கின்றது. இது விஷய விரிவுரை, வரும் 'உணர்வும் தவக்கனலும்' என்ற நூலில் விளக்கிக்காட்டி இருக்கின்றேன்.

மக்களின் எளிமையின் தன்மையில் விளைந்திருக்கும் பெரும் நோக்கங்களைக்கண்டு நான் மிக இருதயம் கசிந்து உருக்கப்படுகின்றேன் அவர்கள் என்றென்றைக்கும் பெரும் நன்மையாளர்களே. அவ்வெளிமையில் அவ்வறிவின் தாழ்மையைக்கண்டு மிகமிக மனவருத்தப்படுவதன்றி, அது அவருக்கு மேலறிவுடையோர்களின் சீர்திருத்தக் குறைவு என்றே சொல்லுகின்றேன். பணப்பொருளுள்ளவர்கள் எளியவர்களை எத்தன்மைக்கொடுத்து காப்பாற்றுவது என்பது ஆலோசித்துச் செய்வது அவர்களின் கடமை. ஆகையால் ஒவ்வொரு இடங்களினும் தொழில் முறையில் அறிவின் சீர்திருத்தம் இருப்பதே மேல். என் இருதய மலர்களே! எல்லாம் ஏக்கமே.

அருளைத்தேடியலைந்தீர், குருவடைந்தீர், கருவறிந்தீர், கனலறிந்தீர் நுனியறிந்தீர், நோக்கறிந்தீர் நோக்கறிந்து, நுண்ணுள் புகவறிந்தீர், புகுந்து நோக்க நோக்க, நோக்கிய நோக்கமும், நோக்கத்தின் நுண்ணுள்ள நுண்ணிய நோக்கமும், நன்பெரும் ஏக்கமென் றறிந்தீர், அறிந்ததை அறிவீர்.

## மனிதன் தரிப்பும், அவன் முடிவும்.

ஃதிர்ந்த புள்ளியில் உந்நியாய், உள்மூலமாய், உச்சி யாய், ஊனாய், உள்ளமாய், உன்னுக்காய், ஊசிமுனைத் துவாரமாய், ஊமை மந்திரமாய், உதிப்பாய், உகைமாய், உள்ளாசையாய், உண்டு உடுத்தி உண்மை வயது வந்ததும், ஒன்றை ஒன்றாகக் தேடி. உத்தம குரு கிடைத்தபின், உருண்டு, பிரண்டு, அரண்டு, திரண்டு, கடந்த உச்சியில் கருவறி, உணர்வதிகமாக ஆக, ஆனதெல்லாம் அப்புள்ளியி லுள்ள ஏகபெரும் ஏக்கம்தான்.

ஆகையால் அறிவின் உயர்வு அவசியம், அவசியம், அவசியமே.

## சடங்குகளால் வரும் தீங்குகள்.

அப்படியே நினைத்து சந்தர்ப்பமிருந்து அவர்கள் பிறந்துவிட்டால் சிறிது வயது வரையிலும் சிற்சில கொடுமை நோயுடனும் இருந்து கிடைத்த சரீரத்தையும் பின் பறி கொடுத்து விடுகிறார்கள். இதில் ஆத்துமாவி னுடைய அநேக விபாகங்கள் தடைபட்டிருக்கின்றன.

அப்படியே சூக்கும லோகத்திற்குப் போகாமல் பேய் லோகத்திலேயே தங்கி இருக்கக்கூடிய ஆத்துமாக்களாய் இருந்தால், நினைத்த இடத்திற்கு வரப்போகவும், படைத்த கிரிகை சாமான்களின் சுவைகளைக் கிரகிக்கவும் சிறு ஏதுவாயிருந்தாலும், அப்பேய்உடலைவிட்டு சுத்த உடல் சுகத்திற்குப் போக தடைப்படுத்தி வைத்துக்கொண்டிருக்

கிறீர்கள். பேய் உடம்பில் உள்ளவர்கள் கருவாய்த் தரித்து பிறந்துவிட முடியாது.

சித்தர்களேயோ, மதஸ்தாபகர்களேயோ, சமயாச்சாரிகளேயோ நினைப்பதால், அவ்வாத்துமா இவர்களது நினைப்பின் காரணத்தால் பிறவிக்கு உட்பட்டதுமல்ல. அந்த ரூபா ரூபம் உலகத்தில் உலாவுவதுமல்ல. அந்த ரூபா ரூபத்தில் அநுபவித்த அறிவு எங்கும் நிறைந்திருப்பதால், யார் நினைக்கின்றார்களோ அவர்களிடத்தில் அவ்வறிவலைகள் தோன்றி பிரகாசிக்கின்றது.

## தேவதைகளை வணங்குவதால் உள்ள நன்மை.

தேவதைகளைத் தெய்வமாகக் கொண்டாடுவதுண்டு. இதிலும் நன்மைகள் அநேகம் உண்டு. இத்தேவதைகளை வணங்குபவர்களுக்கு கஷ்டமோ, துன்பமோ ஏற்படும் இடத்தில் இவர்களை நினைத்தால், வந்து தரிசனைக் கொடுத்து, அவைகளை நீக்கி, நலன் கொடுக்கிறார்கள். ஆயினும் அறிவாளிகள் அது ஒரு கால வரையளவுக்கு வைத்துக்கொள்வதே மேல். அதற்குமேல் அறிவின் உள் வணக்கம் இருப்பது உத்தமம். இதனால்தான் வயது 40ல் வயது 5ம்; 80ம் ஆகிவிடாதீர்கள் என்பேன். ஏனென்றால் சிறு வணக்கங்கள் செய்வது வயது 5ம், நமக்கு அது கிட்டுமோ என்பது வயது 80ஐக் குறிக்கின்றது. அநுபவம் 5 முதல் 20, 25 வரைக்கும் அவரவர் மதத்தின் கொள்கைப் படி ஏதோ ஒன்றை வணங்கிக்கொண்டிருக்க வேண்டியது அவசியம். அதற்குப்பின் தன் உடம்பில் உள்ள தன்

சக்தியை அறிய முற்படுவதும், சிறு வணக்கங்களை விடுவதும் மேலாகும்.

மனிதனின் முக்கிய கொள்கை அறிவின் அனுபோகப் பெருக்கால், பிறவி முடிக்கும் பெரும் கொள்கையாகும்.

உலக நல்லடியார்களே! குதிரை வேகமும், சிங்க வீரமும் சேர்ந்து முடிகொண்டு அரசாளும் நம் ராஜ்ஜியத்தில் மெய்யுணர்வாளர்கள் கருவின் உணர்ச்சியும், கடந்த நிலையும், சேர்ந்து உணர்வு கொண்ட உணர்வுடையீர், ஊக்கமுடையோர், அறிவின் பெருக்கமுடையோர்; சத்திய சமத்துவமுடையோர், சமரசத்திலிருந்து சமரசம் பரப்புவோராவர்.

## உருவப்படங்களால் உள்ள நன்மை.

சாதாரண மக்களுடைய உருவப்படங்கள் சரீரம் இருக்கும் வரைதான் இருக்கவேண்டும். சரீரம் மறைந்த பின் எவ்வகையிலும் அப்படங்கள் இருக்கவே கூடாது. பெரும் அறிவாளிகள், திர்க்கதரிசிகள், மஹான்கள் படம் ஒவ்வொருவர் வீட்டிலும் இருப்பதில் மிக நன்மைகள் உண்டு.

வீட்டில் உடை ஒழுக்கம் இல்லாத படங்களும், கோர ரூப படங்களும் இருப்பதால் மிகக்கெடுதிகள் உண்டு. கோர ரூப படங்கள் உள்ள வீட்டில் பிறக்கும் குழந்தைகளும் கோர ரூபமாகப் பிறக்கக்கூடும். அழகான சித்திரப் படம் ஒன்று அல்லது இரண்டு ஒவ்வொருவர் வீட்டிலும்

வைத்துக்கொள்வது உத்தமத்திலும் உத்தமம். பல படங்களைப் பூஜை பண்ணுவதைவிட தன் படத்தையே பூஜை பண்ணுவது மேல்.

## பொது இடங்களில் செய்யும் நன்கொடைகளால் வரும் நன்மை.

அச்சொத்தில் தன் பெயரை எழுதி வைப்பது உத்தமம். அதில் தான் ஏதோ பொது இடத்திற்கு செய்துவிட்டதாக பறை சாற்றுவதோ, பெரும் ஆணவமாக நினைப்பதோ கூடாது. அப்படி நினைத்தால் செய்தது நன்மை, கொண்ட ஆணவம் தின்மை விளைவிக்கின்றது. அப்படி இருக்க என் பெயர்கள் எழுதிக்கொடுக்கவேண்டுமென்றால், பொது இடத்தில் கூடும பெரியோர் பலரும் சிறிது நிமிஷமாவது அப்பேரைக்கண்டோ, கேள்விப்பட்டோ அருப அறிவில் யாருக்கும் தெரியாமல் அவர்கள் மேல் விசுவாசம் கொள்ளுகின்றார்கள். அதனால் அவர்களும், அவர்கள் வமிசத்தார்களும் நல்ல ஞாபகத்தில் நன்மைக்கு ஆளாகிறார்கள்.

## மனிதனிடத்தில் இருக்கும் குணபேத ஏக்க அணுக்களின் தொந்தரவு.

மனித சரீரத்தில் கொடிய கபவஞ்சகக் குரோதகுணமுடைய துரோகிகள் பேய், பைசாசாவதுமில்லாமல், அவர்கள் சரீரத்தில் இருக்கும்போது, இருந்த துரோக ஏக்கம் அணுக்களில் பதிந்திருப்பதால், அவ்வணுக்களின்

சேர்க்கையின் நிர்வாகம், பின் உலகத்திலுள்ள மனிதர்கள் உடம்பில் புகுந்து க்ஷயம், காசம் உண்டாக்குகின்றன. தான் இருந்த சரீரத்தில் இருந்தவன் பைசாசாகவும், அவன் இறந்த பிறகு மற்ற அநேகம் பேருக்கு காச க்ஷய ரோகங்களையும் உண்டாக்குகிறது.

சிற்சில அல்சாட்டிய குணமுடையவர்கள், தர்க்கமுடையவர்கள், வஞ்சனை, சூனியம் செய்பவர்கள், குறளி, மோடி செய்பவர்கள் இவர்களிடத்திலுள்ள ஏக்க அணுக்கள் சிறு சொரி, சிரங்குகள், கடவாளப்புண்கள், கக்குவான், சிறு காய்ச்சல்கள், முறைக்காய்ச்சல்கள் உலக மக்களுக்கு உண்டாக்குகின்றன.

அளவுக்கு மீறிய கஞ்சத்தனம் அதாவது லோபகுணம் உடையவர்களின் அணுக்கள் வாதம், பாண்டு ரோகங்களை உற்பத்தி செய்கின்றன.

உலகில் அநேக புல் பூண்டுகளாலும், நீர் நிலக்காற்றாலும், அநேக வியாதிகள் உற்பத்தியாவதுமுண்டு. ஆனால் மனிதனிடத்தில் மிகமிக தைரியமிருக்குமபக்ஷத்தில் இவ்வியாதிகள் கிட்டநெருங்க அஞ்சுகின்றன. ஆனால், லோக மக்களிடமிருக்கும் குணங்களின் அணுக்கள் மனித மக்களிடம் அஞ்சாது நிர்வாகம் நடத்த முற்பட்டுவிடுகின்றன. லோக சிருஷ்டியில் மனிதனுய்ப் பிறந்து அறிவின் நிர்வாகம் இல்லாதபோது அநேக கொடிய வியாதிகள் இல்லாமலே இருந்தன. அறிவின் நிர்வாகத்துக்குப்பின், அறிவோடு நடக்காததால், அநேக சட்ட திட்டங்கள் ஏற்பட்டன. அச்சட்டதிட்டங்களை மீறிய துரோகிகளால் அநேக கொடிய

வியாதிகளும் ஏற்படுகின்றன. ஆகையால் உலக நல்லடியார்களே! உங்கள் சரீரத்திலுள்ள குணங்களைப் பாதுகாக்க உணர்ந்துகொள்வீர்களானால், நீங்கள் நல்லடியார்களாவது மன்றி, அநேகரை இம்சையினின்று பாதுகாக்கிறீர்கள். ஆகையால் நான்,

அறிவை யறிந்தோர் அன்பை மறவார்
பொருளை யறிந்தோர் புகழை விரும்பார்
கருவை யறிந்தோர் கடவுளை நாடார்.
குருவையடைந்து அறிந்தோர் குறையில்லாதார்
பிறவியில்லாதார் — என்றும்,

உடல்மேல் அழுக்கை நீரால் போக்க
உடல் உள்ளழுக்கை உருக்க ஒழுக்கத்தால் போக்க
அறிவின் மேலழுக்கை பக்தியால் போக்க
அறிவின் உள்ளழுக்கை ஆசானால் போக்க—என்றும்,

உடை ஒழுக்கம் உடம்பின் ஒழுக்கம்
உடம்பின் ஒழுக்கம் உயர்வின் ஒழுக்கம்
உயர்வின் ஒழுக்கம் அறிவின் பெருக்கம்
அறிவின் பெருக்கம் அவன் நிலையடைவான்—என்றும்

பாலாயிருந்து நீரில் சாருவதைவிட, நெய்யாயிருந்து நீரில் சாராததுபோல், உலகத்தில் இருந்துகொள்ளுங்கள் என்றும், பேதகம் இல்லை இல்லையென்றும் சொல்லி, பாதகம் செய்திடாமல், பேதகமில்லா நிலையில் நிலைத்து, பாதகங்களை எரித்து சம மேல் அறிவுக்கு ஆளாகுங்கள் என்றும்

சொல்லியிருக்கின்றேன். ஆகையால் அறிவின் பெருக்கம் அவசியம். அவசியம்.

துப்புரவில்லா துரிதமிருந்தால் நோயில்லை. துப்புர விருந்தும் துரிதமில்லையேல் நோயுண்டு.

## வியாதிக்கு மருந்து.

சிறு காய்ச்சல்கள் சுமார் 3 நாளையிலிருந்து 11 நாள் உள்ள காய்ச்சல்களுக்கு ஒரு வெற்றிலைக்குள் ஒரு பாவை இலையை வைத்து கடுகு அளவு நல்ல சுண்ணாம்பும் வைத்து காய்ச்சல் வரும்போது கொடுத்தால், வேர்வை உண்டாகி காய்ச்சல் நின்றுவிடும். மூன்று வேளை கொடுத்தாலும் போதும்.

சக்குவான், கால் கடுவாளப்புண்கள் 90 நாளைக்கு மேல் இருக்காது. பல மருந்துகளைச் செய்வதைவிட தயிர் பூஷணி, கொத்தவரைக்காய், நீங்கலாக சத்தான ஆகாரங் கொடுத்து வருவதுமேல். கடவாளப்புண்ணுக்கு மட்டும் 10, 20 பச்சரிசியைக் காய்ச்சிய பாலிலரைத்து மேற்படி புண்ணுள்ள குழந்தை தூங்கும்போது மேல் பூசி விடவும். காலையில் நல்ல சோப்பைக்கொண்டு கழுவி விடவும். 3 அல்லது 7 நாட்கள் செய்தால்போதும். குழந்தைகளுக்குத் தாய்ப்பாலை தவிர்த்து பச்சைப்பால் கொடுக்கக்கூடாது.

பெண்கள் நோவாயிருந்தால், வலது முழங்கைக்கு மேல் 2 அங்குலத்தில் அடிக்கடி தொடுங்கள்.

இருதய சம்பந்தமான வலிகளுக்கெல்லாம் சந்தோஷ செய்திகள் நினைத்தல், பிறரால் கேட்டினும் போதும், தீரும்.

## காசத்தைத் தீர்க்கும் முறை.

குருச் சொற்களின்மேல் விசுவாசம் கொளவதே பெரும் மருந்தாகும்.

## காசத்தை அடியோடு நீக்குவதற்கு முறை.

அரசாங்க மெடிக்கல் டிப்பார்ட்மெண்டு, காசத்தை இரண்டு வருஷங்களுக்குள் போக்கிவிடலாம். போய்விடும்.

இனி காசநோய் எங்கும் இல்லவே இல்லை என்றும், 2 வருஷத்திற்குள் வந்திருக்கும் காசமெல்லாம் நீங்கிவிடுமென்றும், கண் பார்வை எங்கெங்கு படுமோ அங்கங்கெல்லாம் விளம்பரங்கள் ஒட்டவேண்டும். இதனால் காசமே இரண்டு வருஷத்தில் நீங்கிவிடும்.

துப்பாக்கி உள்ள ஒருவனிடம் துஷ்டன் நெருங்காததைப் போன்று, அரசாங்க விளம்பரப் பதிவு எல்லா இருதயங்களிலும் பதிந்துவிட்டால், அப்பதிவுக்கஞ்சி இக்காச அணுக்கள் மக்களிடம் நெருங்கமாட்டா.

இதைத் தூஷிப்பவர்களைச் சட்ட திட்டங்களுக்கு உள்ளாக்குவது அவசியம்.

## தேத்தண்ணீரால் தீரும் வியாதிகள்.

1. காலையில் ஒரு ஆகாரமும் சாப்பிடாமல் பால், சீனியுடனாவது, பால், சீனியில்லாமலாவது ஒரு வீசம் அல்லது அரைக்கால்படி தேததண்ணீர் மட்டும் சாப்பிட்

டால் வயிற்றுப்புண், மூலம், தொண்டைப்புண், சரீர உட்பாகங்களிலுள்ள புண்ணும் தீரும்.

2. வெறும் தேத்தண்ணீர் சிறு குடுடன், ஆசனப் புண், மூலப்புண், மற்ற தேகத்தில் உள்ள புண்களைக் கழுவினல் சொஸ்தமாகும்.

3. மெல்லியத்துணிகளைத் தேத்தண்ணீரில் போட்டு, வேகவைத்து, அத்துணியை எடுத்து வெய்யிலில் நன்ருக காயவைத்து கத்தரித்து வைத்துக்கொண்டு, அநேக இரணங்களுக்கு பிளாஸ்திரியாக உபயோகப்படுத்தினல் இரணங்கள் ஆறிவிடும்.

4. தேத்தண்ணீர் சாப்பிடுவோர் ஆறிய பின்னும் சாப்பிடக்கூடாது. ஆறியதைச் சுடவைத்தும் சாப்பிடக் கூடாது.

மஞ்சள்:— நிதானம, இரத்த சுத்தி செய்யும். மிஞ்சி ளுல் போகத்தைத் தடைப்படுத்தும். இரத்த ஓட்டம கம்மி யாக்கி, சோகத்தை உற்பத்தி செய்யும்.

மல்லி:— அளவுக்கு மீறி இருந்தால் குடல் சம்பந்த மான வியாதிகளும், பெண்களுக்குக் கர்ப்பப்பை சம்பந்த மான சில வியாதிகள் உண்டாகும்.

மிளகு, மிளகாய்:— நிதானம் இரத்தசுத்தி செய்யும். உற்சாகம் கொடுக்கும். மிஞ்சினல் தாது நஷ்டப்படுத்தும். போகத்தில் நிலைக்கவிடாது.

புளிப்பு:— புளி, காடிநீர், இவைகள் பெரும் நன்மையைக் காட்டுவதுபோல் காட்டி, அதனால் வரும் தீமைகள் அநேகம். முதலில் உலகப் பற்றுதல் அதிகம் உற்பத்தியாகும். அதை அனுபவிக்கக்கூடிய பொறுமையையும், நன்மையும் உண்டாக்காது. அறிவிற்கு மந்தம் உற்பத்தி செய்வதோடு, ஒன்றிலும் நிலைக்காதபடி உழலச்செய்யும். தன் நிரத்தால் எதுவும் செய்து முடிக்க முற்படாது. பிறர் தைரியத்தையும் ஒப்புக்கொண்டு, சிறிது காலத்தில் அதையும் விட்டிடச் செய்யும். ஆகாரம் அதிகம் சாப்பிடச் செய்யும். ஆகாரம் அதிகம் சாப்பிடச்செய்து, அதில் உறைந்திருக்கும் சத்தின் விந்து நிடசித்தம் குறைவாக இருக்கும். தயாள குணமும், இரக்கச் சிந்தனையும் இருந்தாலும், சொற்ப அளவே இருக்கும்.

ஏலம், கிராம்பு, பட்டை:— இவைகளைக் கொஞ்சமாக சேர்த்துக்கொள்வது மேல். சரீர உழைப்பாளிகளுக்கு பழைய சாதம் நன்மையைப் பயக்கும். அறிவின் உழைப்பாளிகளுக்குச் சூடான ஆகாரமே நன்மை பயக்கும்.

எல்லா ஆகாரங்களிலும் அதனதற்குரிய சத்துகள் உண்டு. மசாலா அதிகம் சேர்க்காமலும், பதார்த்தங்கள் அநேகம் சேர்க்காமலும், வேண்டிய அளவு ஒன்று அல்லது இரண்டு பதார்த்தங்களுடன் சாப்பிட்டுக்கொள்வது மேல்.

வெங்காய சூப்பு:— சிறு வெங்காயம் 6 தோலா எடை, சிரகம் 20ம், துவரம் பருப்பு நீர்ல் சூப்பைப்போல் காய்ச்சி ஒரு கிளாஸ் அளவு காலையில் ஒன்றுமே சாப்பிடாமல் சாப்பிடவும். விவாகமில்லாதவர்கள் ஒரு வாரத்திற்கு

மேல் சாப்பிடக்கூடாது. விவாகமுள்ளவர்கள் 20 நாள் சாப்பிடலாம். இதனால் நகத்திலிருக்கும் கறுப்பும், சிறு மேகமும் எடுபடும். இரத்தவிருத்தியுடன் தாதுபுஷ்டி யுண்டாகும். சோகையும் எடுபடும்.

இரத்தக் கோதிப்புக்கு:— யோகம் செய்தவர்களாயிருந்தால் செய்யாதிருத்தல். அடிக்கடி சௌரம் செய்து கொள்ளாதிருத்தல். வயது கொஞ்சமாயிருந்தால் 4 நாளைக்கொருதடவை சிற்றின்பம் செய்தல். குளிர்ந்த ஆகாரமும், நல்ல காற்றும், இருட்டுமுள்ள இடங்களில் வசிக்கவும். சைவமில்லாதவர்கள் கொழுப்புச்சத்துள்ள ஆகாரம் சாப்பிடவும். சைவமுள்ளவர்கள் புடலங்காய், சுரக்காய், அவரை, சாப்பிடுதல். அடிக்கடி மூளைக்கு வேலை கொடுக்காதிருத்தல். நீராகாரம் அடிக்கடி சாப்பிடுதல், பேசாதிருத்தல், மேலும் ஒரு ஈசிச்சேரில் படுத்துக்கொண்டு தன் கால்களைக் கெரண்டை வரையும் ஒரு பாத்திரத்தில் தண்ணீரில் ½ மணி நேரம் வைத்திருக்கவேண்டும். வாசனைத் திரவியங்களை உபயோகியாதிருத்தல் பன்னீரை உபயோகப்படுத்திக்கொள்ளலாம்.

பீனிசத்துக்கு:— கொடை மல்லிகைப் பூவை 20 தினம் வரை அடிக்கடி நுகர்ந்துப் பார்த்து வந்தால் ஷை வியாதி சுகமாகும்.

மூல நோய்:— உறப்பு, ஒரே இடத்தில் இருப்பான வேலைகள், அதிக தூலைவு சைக்கிள் பிரயாணம், அளவுக்கு மீறிய கால்நடை இவைகளால் மூலநோய் ஏற்படுகிறது. சிறு வயதில் அதிக போகம் செய்வதிலும் இது ஏற்படு

லாம். இது மேற்கண்டவைகளில் நிதானமாக இருப்பதுடன், சிகப்பு காருமணி — தட்டைப்பயறு — காலையில் வெறும் வயிற்றில் விசம்படி அளவு வேக வைத்து 40 நாளைக்கு சாப்பிட்டுவர குணமாகும்.

மலடு:— மலட்டுக்குக் காரணம் அநேகம் உண்டு. நன்கு யோசித்துப் பார்ப்பீர்களானால் முற்பிறவிகளில் குழந்தைகள் பெற்று, அக்குழந்தைகளால் சலிப்பேற்பட்டு, இனி குழந்தை வேண்டாம் என்ற ஏக்கம் முடிவு கட்டியதின் பலனே பிள்ளையில்லாமல் இருக்கின்றார்கள். இது அவர்களுக்குத் தெரியாமல் பிள்ளை வேண்டுமென்று இப்பிறவியில் ஏங்குவதால் மறுஜென்மத்திற்கும் தொந்தரவுக்கும் துரிதப்படுகின்றவர்களாகின்றார்கள். இது கூடவே கூடாது. பிள்ளையில்லாப் பெரியோர்கள் நன்மையிலும் நன்மையுடையோர்கள் தான். இப்படி சொன்னதினால் பிள்ளையுடையவர்கள் தின்மையுடையவர்கள் என்று தீர்ப்பு செய்துவிடாதீர்கள். இவர்கள் இல்லையேல் அவர்கள் இல்லை என்பது தெரியவரட்டும்.

பாக்கியத்திலும் பெரும் பாக்கியம் பிள்ளை பாக்கியம். அப்பாக்கியத்திலும் பெரும் பாக்கியம் பிள்ளையில்லா பாக்கியம். அதிலும் பெரும் பாக்கியம் இவ்விரண்டையும் தெரியும் பாக்கியம்.

## தாதின் அபிவிருத்திக்கு.

கால் ரூபாய் எடையுள்ள முருங்கைப் பூவை சிறிது கற்கண்டு சேர்த்து பசுவின் பாலில் நன்றாக காய்ச்சி

எடுத்து ஒரு கிளாஸ் பால் சுமார் 7 நாள் சாப்பிட்டால் தாதின் அபிவிருத்தியும், தத்துவத்தின் அபிவிருத்தியும் உண்டாகும். படுக்கைக்கு அரை மணி நேரத்திற்கு முன்னே சாப்பிடவும். போக முடையவர்களுக்கு ஒரு வாரமும், வாலிபர்களாயிருந்தால் 3 நாளைக்கு மேல் சாப்பிடக்கூடாது.

## பெரும் ஆராய்ச்சியாளர்களின் பாஷா பகுதி.

ஒரு வயதுள்ள வியாதியில்லாத சுமார் 40 குழந்தை களை உலக பாஷை அவர்களிடம் பேசாமலும், உலக சச்சடி எட்டாத இடத்திலும் வைத்திருந்தால் மதம், பாஷை, அறிவாளி, வீரன், இராஜா எல்லாம் அதிலேயே ஏற்பட்டுவிடும்.

1. கடலைக் கடந்தது அலை;
அலையைக்கடந்தது ஆவி,
ஆவியைக் கடந்தது அணு.

2. நெருப்பைக் கடந்தது புகை;
புகையைக் கடந்தது வெப்பு,
வெப்பைக் கடந்தது அணு.

3. உடலைக் கடந்தது வேர்வை;
வேர்வையைக் கடந்தது வாடை,
வாடையைக் கடந்தது அணு.

4. நிலத்தைக் கடந்தது மலை;
மலையைக் கடந்தது மரம்;
மரத்தைக் கடந்தது சுவை;
சுவையைக் கடந்தது அறிவு;
அறிவைக் கடந்தது உறிந்த ஆசான்.

5. நாபத்தைக் கடந்தது குழந்தை;
குழந்தையைக் கடந்தது அன்பு,
அன்பைக் கடந்தது அறிவு,
அறிவு உள்ளது அணுவில்.

6. அணுவைக் கடந்தது அக்னி;
அக்னியைக் கடந்தது நாதம்,
நாதத்தைக் கடந்தது நினைப்பு,
நினைப்பாய் உள்ளது அவன்,
அவனாய் உள்ளது இவனே.

உயிரின் உருவம் கண்ணினுள் பாவை.
பாவையின உருவம் கருத்தினுள் அறிவு.
அறிவின் உருவம் ஜோதியாய் விளைந்த சொரூபம்.
சொரூபத்தின் உருவம் நாதத்தினுள் உள்ள நினைப்பே.

நினைப்பாய் உள்ளது அவன்,
அவனாய் உள்ளது இவனே.

1. பக்தர்கள் பெரியோர்களை சமாதானப்படுத்த முற்படுதல் மேற்படர்ந்த புல் ஆல்விருக்ஷத்தை தன் இனமாக்க முற்படுவது போன்று.

2. பெரியோர்களிடம் தர்க்கம் செய்வது சிங்கத்தின் காதேறி உபதேசம் செய்ய முற்படும் சிற்றெறும்பின் செய்கை போன்றது.

3. இச்சபையை அடைந்தும் வேறு ஒன்றேதோ இருக்கிறதென்று நினைப்போர், கடலில் உள்ள மீன் கால்வாய் நீரை நம்பி எதிர்நோக்கிச்சென்று மாளுவதுபோல்.

4. **எதார்த்தத்தை எதிர்த்து ஏமாந்த கொள்கைகள்.** மலையை எதிர்த்து கோபுரம் வளர்ப்பது போன்றும், கடலை எதிர்த்துக் குளத்தை அகலிப்பது போன்றும், மைதானத்தை எதிர்த்து மேல் வீடு கட்டுவது போன்றும், சூரியனை எதிர்த்து விளக்கை போடுவது போன்றும்.

அடிக்கடி முகத்தைக் கண்ணாடியில் பார்த்து சந்தோஷித்துக் கொள்ளுங்கள்.

ஊர்களிலுள்ள சங்கங்களிலும், கோவில்களிலும், பெரியோர்கள் ஒரு கூட்டம் போட்டு அவ்வூரில் உள்ள துஷ்டன் நல்லபடியாக வேண்டும் என்று நினைத்தாலே அவன் உடனே நல்லபடியாகி விடுவான்.

## குருக்களிடம் நடந்துகொள்ளும் முறை.

குருவை அடைவது மேல்.

அதற்கும் மேல் விசுவாசம் கொள்ளுதல்.

அதற்கும் மேல் அனுபவத்திற்கு வருதல்.

அதற்கும் மேல் தானே தன்னிலை யடைதல்.

மெய்யுணர்வாளர்களே! உலக நல்லடியார்களே! குருக்களைப்பற்றி ஆருதாரத்தில் சொல்லியிருக்கின்றேன். குருக்களுக்குச் சிற்சில ஹிம்சைகளும், அவர்களின் எதார்த்தத்திற்கு இடையூறும் செய்து வருகின்ற அறிவீனர்களும் உலகில் அநேகர் உண்டு. அவர்களின் அறிவுக்கு வேண்டிய சமாதானம் சொல்லியும், கேளா மூர்க்கர்களால் குருக்களுக்கும் கோபம் மூளுவதுண்டு. அதை அவர்களே அடக்கி சமாதானம் அடைந்தாலும் இக்கோபவேக அணுக்கள் அவனுக்கு ஏதாவது காய, அடிகள், நோய்கள் உண்டாக்குகின்றன. அதுவும் அவனுக்கு நன்மை செய்து உணரவே வைக்கின்றன. அப்படிக் கோபம் மீறியதும் அதற்கோர் முடிவு வைத்து ஏதாவது ஓர் சொல் சொல்லிவிட்டால், அச்சொல்லின் சூட்டால் அவனும் அவனின் வம்சத்தவர்களும் குறையோடு பிறக்கின்றார்கள்.

இராஜாங்க சூடு ஒருவன் அளவு தான். ஆனால், இச்சூடோ அவனையும், அவனின் வம்ச பாரம்பரைகளையும் பாதிக்கின்றது. அப்பேர்பட்ட தீங்குகளை மருந்தாலும் வேறு எந்த வகைகளாலும் நீக்கமுடியாது.

உலகத்தில் வேகமாய் ஓடும் இயந்திரத்தில் அறிவீனத்தால் ஒருவன் எதிர் நின்றானானால், ஓட்டக்கூடிய மதியுடையவன் அதை நிறுத்தி இவனை விலக்குவான். மிஞ்சி மிஞ்சி அதைத்தடை பண்ணுவானானால் இவன் அவ்வாகனத்தில் விழ்ந்துமடிவான். ஓட்டிய மதியுடையவனுக்கு நல்ல பெயர் தான் கிடைக்கின்றது.

காய்த்துப் பழுத்த மரத்தில், கம்பு, கல்லால் எறிந்து பழம் பறிப்பதில், கம்போ, கல்லோ கொப்பில்பட்டு எதிர்த்து கண்ணைக் கெடுத்துவிட்டால் கொப்பின்மேல் உள்ள குறை என்ன? அதைப்போன்று வேகமாய் ஓடிக் கொண்டிருக்கும் வாகனத்தை ஒருவனுக்காக வேண்டி நிடீரென்று நிறுத்தினல், வண்டியிலுள்ள ஆயிரமாயிரம் ஜனங்களைக் கஷ்டத்துக்குள்ளாக்குவதைவிட இவனை மடித்து இயந்திரத்தை ஓட்டுவது மேலில்லையோ?

ஆகையால் குருக்களிடம் கேட்கும் கேள்வி சமய சந்தர்ப்பத்தை அனுசரித்தும், அறிவான கேள்வியாகவும் இருக்கவேண்டும். குருக்களிடம் மட்டுமா? பலர் ஆமோதித்த பெரியோர்களிடமும், ஒவ்வொரு ஏக்கங்களில் ஏங்கிக்கொண்டிருப்போர், வீரபக்தியுடையோர், இவர்களிடமும் அப்படியே.

அறிவறியா கேள்வி கேட்போர்,
கண்ணிருந்தும் கருத்துக் குருடர்,
கிடைத்த உடம்பை வீணய்க் கெடுக்கின்றனர்கள்.
அதற்காகத்தான்;
நல்லாரைக் கண்டும் காணு நாயைப்போல் குலைக்கும் மக்கள்
நன்றியுள்ள நாயினும் கேடுகெட்ட நாய் மக்கள் தானே?
நாயுக்குள்ள நன்றியும் இப்பொல்லா மனிதனுக்கில்லையோ?
நல்லோருக்கு எப்போதும் நல்லது நல்லது தான்.
நல்லோர் நன்றி இவன் அறிவதெப்போ? — என்றேன்.

பெரியோர்களின் சாபங்கள் இருந்தால் குருக்களின் சொற்களால் போக்கலாம். குருக்களிட்ட சாபத்தை அக்

குருக்களாலோ அக்குருக்களின் பீடத்தில் பின் வரும் குருக்களுடைய சொற்களாலோ தான் போக்கலாம்.

ருசியில்லாப் பெரும் பழமும்
தயாளமில்லா மனித நெஞ்சமும்
ஆடையில்லா சரீர அழகும்
படித்தபடிப்பால் பல கேள்வியும்
பலன் கொடுக்குமோ? — என்றும்

மனது மனதென்பார் மதிகெட்டார் மனதின் இருப்பிட மறிந்தாரோ?
அறிவறிவென்பார் அறிவில்லாதார் அறிவிருப்பிட மறிந்தாரோ?
நான் பிர்மம் பிர்மம் என்பார் நன்மக்காள் நான் என்ற பிர்மமயமறிந்தாரோ?

அருளை யறிந்தாரோ? அறிவை யறிந்தாரோ? கருவை யறிந்தாரோ? குருவை யறிந்தாரோ? குறையை முடித்தாரோ? என்றும்;

சரீரத்திமிர் அத்திமிரே அச்சரீரத்தை அழிக்கும்,
பொருள்திமிர் அத்திமிரே அப்பொருளை அழிக்கும்,
புகழ்த்திமிர் அத்திமிரே அவனறிவை அழிக்கும்,
படிப்பின் திமிர் அத்திமிரே கிட்டியதை அழிக்கும்,
இத்திமிர்களை எல்லாமழிக்கும் என்சொல், குருசொல்,
அறிவின் அநுபோகச் சொல் — என்றும்,
பலதில் உழல்வது ஒன்றை அறிவதற்கு,
ஒன்றை யறிந்தபின் பலதில் உழல்வது அழகோ?

ஆகையால் எத்தொழிலிலும் சம்பாதித்து பணப் பெருக்க முண்டாகிவிட்டால் பணக்காரத் தன்மையுடைய வரே. அவர் எல்லா சுகபோகங்களையும் உண்டாக்கிக் கொள்ளமுடியும். அதே போல் எச்சமூகத்தினரும் எத் தொழிலிலிருந்தாலும், அறிவைத் தேடி, அறிவைப் பெருக்கிக் கொண்டீர்களானால், சமூகம் கடந்து சமத்துவ நிலையுடையவரே. இவர் எல்லாரிடத்திலும் உள்ள நன்மை யும் சுகமும் அறியலாம். அறிவிக்கலாம்.

## குருக்களின் ஏக்கம்.

தாய் தந்தை தான் என் செய்வர்?
தங்கை தமையர் தான் என் செய்வர்?
தாரந்தான் என் செய்வள் — தான் பெற்றெடுத்த
குழந்தைகள் தான் என் செய்வர் — தன்னோடு
ஒட்டியிருக்கும் சமய சிநேகிதர்கள் தான் என்செய்வர்?
பெரும் மேலாக செய்திட்ட போதிலும்,
கால அளவில் நின்று மறையும்.
குரு சிஷ்யர் பணிவும் தொண்டு முறையும்
யுகயுக காலங்களெல்லாம் மறையாது தோன்றித்தோன்றி
பெரும் நன்றி செய்கையை நிலைநிறுத்தும் — பின்னும்,
தாய் தந்தை தாரம் இருந்தென்ன? தன் கருவால்
பெற்றெடுத்த
குழந்தைகள் தான் இருந்தென்ன? கூடிக்குலாவும்
சிநேகிதர்கள் இருந்தென்ன? குருவோடு குலாவும்
குழந்தைகள் இருந்தால்,
கோடி யுகயுகமும் பேரழியாது நின்று நிலை நிறுத்தும்.

என் இருதய மலர்களே! இதற்காக வேண்டித் தான், நாடினீர்களா? நாடியலேந்தீர்களா? நாடிய நாட்டம் பூர்த்தி செய்ய வந்தீர்களா? நாடியிருந்தால் அதன் நலன் தெரிந்து கொண்டீர் — இனி ஒன்றை நாடீர் — நாட்டியிருக்கும் கம்பம் போல் உள்ள நாட்ட மெய்யுணர்வை நழுவிடாது நாடுவீர் — என்றும்,

ஓடி ஓடி யலேந்தீர்களா? ஓய்வு கிடைக்கும் சமயமெல்லாம், உருக்க நீர் வடித்தீர்களா? ஓஹோ! உன்னை என்னை எப்போதடைவோமென்று விம்மி விம்மி அழுதீர்களா? உண்மைதானா? உருக்கமாய் கேட்கின்றேன். ஒளியாதீர்! ஒளியாதீர் உண்மையானால் உணர்வை விட்டிடமாட்டீர்! இது சத்தியம். ஒரு முறையோ? பல முறையோ? ஏக என் மறை சொல்லும் சொல் சத்தியத்தால் — என்றும்,

மனிதனாய்ப் பிறந்தீரோ? அதை மறந்தீரோ? மறந்ததைத்தெரியத் திரிந்தீரோ? திரிந்த பலன் அடைந்தீரோ? அடைந்ததில் தெளிந்தீரோ? இனி பிறக்க மாட்டேன், தன் ஏகப் பிறவி முடிக்கும் வரை இவ்வுடம்பை விடமாட்டேன் என்று உறுதி கொண்டீரோ? உண்மைதானா? உண்மையானால் உணர்வின்மேல் நிலேத்திருக்கும் நிலேயில் நிறுத்தியிருக்கின்றேன் (என்று உருக்கமாய்கேட்டு உறுதிப் படுத்தியிருக்கின்றேன்).

ஆகையால் உலக நல்லடியார்களே! தன் தைரியம் தன்னேடு இருந்தால், எல்லா நன்றியும் அறிந்து தன்னிலே அடையலாம்.

உலகத்தில் குருக்களின் விசுவாசத்தையும், தன் தைரிய திட சித்தத்தையும் விட்டு ஏமாந்தோர்க்குத்தான் பல ஜெபதப மந்திரங்களும், பல எந்திர தாயித்துகளும் ஏற்பட்டன.

கடலையும் எல்லா லோகங்களையும் அளக்கலாம். ஆனால் தன்னிலையடைந்த குருக்களை அளக்க முடியவே முடியாது. அவரை அண்டி தன்னிலையடைந்து கொண்டால், பின் இவர் நிலையும், குரு நிலையும் ஒன்றே. அதனால் தான்;

பெரியோர் என்றாரே! அவர் என் செய்கின்றார்? என்சொல்கின்றார்? ஏது செய்து முடிக்கின்றார்? என்று பார்க்கவந்த பலருள், பார்த்து, அடைந்து, பழகப்பழக பெரியோரினும் பெரியோராய், என்னிலையடைவோர் என்னிலை யுடையோர்.

ஆனதால், சொன்னேன் — சொல்லுகிறேன் — இனியும் சொல்லுவேன் — என் சொல், இன் சொல், எச்சொல்லுக்கும் என் சொல்லே மூலச் சொல்.

1. இரும்பு, இரும்போடு உரசி, வெகுவேக தொலை தூரம் செல்வதுபோல், அறிவு, அறிவோடு உரசி, அக்கனலில் ஐக்கியமாகிக் கொள்ளுங்கள்.

2. வேக நுட்ப வினையச் சொற்களால் விவகாரங்கள் ஏற்பட்டிடாமல், பெரும் வேக நுட்ப வினையச் சொற்களால் விளைந்துள்ள விவகாரங்கள் எல்லாம் வீழ்ந்து, அழுது, மடிந்து, அழிதல் வேண்டும்.

3. கடலின் ஓரக்கரைகளைக் கவனிப்பதைவிட, கடலின் நடுப்பாகத்தையும், ஆழத்தையும் கவனியுங்கள்.

4. அறிவின் கண்ணுடையோர், உயரத்தைக் கவனிப்பதைவிட, அதன் அடிப்படையின் ஆழத்தைக் கவனியுங்கள்.

5. நீர் பள்ளம் நிரவும். அன்பு எல்லாம் நிரவும்.

6. பணத்தின் பாய்ச்சல் பாதாளம் வரை. அறிவின் பாய்ச்சல் எல்லா லோகம் வரை.

7. துணிவில்லா வார்த்தையைக் கோடி கொடுத்தாவது விலக்கு.

8. சாக்குப் போக்கு சொல்லும் முகம் பாராதிரு.

9. கஷ்டச்சொற்களைத்தானே விளைவித்து, கஷ்டங்களை வாங்குவதைவிட கஷ்டமில்லாச் சொற்களை விளைவித்து சத்தியத்திற்கு ஆளாகுங்கள்.

10. ரோசத்தைக் கொடுத்து சொல்லொன்று வாங்குவதைவிட, ருசியைக் கொடுத்து சொல்லொன்று வாங்குவது மேல்.

11. களைக்கு அஞ்சி விளைவை விடுவதைவிட, களையைக்கிள்ளி விளைவை அறுவடை செய்வதுமேல்.

12. சந்தேகங்களுக்கஞ்சி சத்தியத்தை விடுவதைவிட, சந்தேகங்களைக் கிள்ளி சத்தியத்திற்காளாவது மேல்.

13. புஷ்பம் வைத்து வணங்குவதைவிட இராகத்தில்லயித்து வணங்குவதுமேல்.

14. மரம் ஆடிக் காற்றடிக்கிறது என்பதைவிட, காற்று அடித்து மரம் ஆடுகிறது என்பது மேல்.

15. மேல் கருத்து நினைப்பு - நீழ்க்கருத்து அறிவு - உடற் கருத்து மனிதன் - மனிதக் கருத்து சிந்தனை - சிந்தனைக் கருத்து அறிவு - அறிவு கருத்துமேல் நினைப்பில் - நினைப்பாய் உள்ளது அவன் - அவனாய் உள்ளது இவனே.

16. வியாபகம் எங்கும் - வியாபகத்தின் உலாவுதல் ரூபா ரூபத்தில் - ரூபா ரூபத்தின் முடிவு மனித உடம்பு.

17. பறக்கும் பறவையைக் கூண்டில் அடைப்பது போல் அறிவின் குழந்தையை மதத்தில் அடக்காதீர்கள்.

18. சொல்லொன்றில் சுகம் கண்டோர், சுழிமுனை திறந்து, சுகத்தில் சும்மா இருப்பர்.

19. நல்ல சிநேகிதரின் ஞாபகம் ருசியறியும்போதெல்லாம் இருக்கவேண்டும்.

20. சாமி! சடையென்ன தோலென்ன? அப்பா, சந்தோஷம், அது உன் மாய்கையைத் தோற்கடிக்கும் மாயாத்தோற்றம்.

21. பொதுயிடத்துப் பூனையாயிருப்பதைவிட, பொதுயிடத்து நாயாயிருப்பது மேல். இவ்விரண்டையும் அறிவது அறிவீசன் செயல்.

22. பூர்வீக மதங்களெல்லாம் பூமியைப் போன்று. புதிதாய் தோன்றும் மதங்களெல்லாம் ருசிகர சத்துடைய கனிநிறை விருக்ஷங்களைப் போன்றது. தோன்றியது எதில்?

23. பிறரைத் தாழ்த்தி தான் உயர்வதைவிட, பிறரை ஆமோதித்து தான் உயர்வது மேல்.

24. வாழைக்குநீர்பாய்ச்சினது போலில்லாமல், என் இருதயமலர்களே, ஆலவிருக்ஷத்திற்கு நீர் பாய்ச்சுவதைப் போல் என் சொல்லில் இருந்துகொள்ளுங்கள்.

25. விளக்கங்கள் விளக்கும்போதெல்லாம் பித்தளை யைப் போல் பிரகாசிப்பதைவிட, விளக்கிய விளக்கங்களில் பொன்னைப்போல் பிரகாசியுங்கள்.

## குருவையடைந்தோர்.

துணையை நாடி, துணைவியை யடைந்து இன்ப சுகபோக நித்திரை ஆனந்தத்தில், துணையில்லா மங்கை யைத் தேடினபலன்; குறையில்லா குணமும், கொடை விரும்பா நெஞ்சமும். கூடினால் போதுமென்ற கொங்கை யில்லா மங்கை குருவாய் வாய்த்தார்.

என் இருதய மலர்களாகிய மெய்யுணர்வின் பெண் சிரோன்மணிகளே! உங்களைத் தாயின் தன்மையிலும், குழந்தையின் தன்மையிலும் இருவகையிலும் ஒப்புக் கொண்டேன். அதேபோல் தகப்பன் தன்மையிலும், தன் அன்பின் குழந்தையின் தன்மையிலும் நீங்கள் என்னை ஏற்றுக்கொண்டிருக்கின்றீர்கள். இம்முறையை அறியாத உலக குரு, சிஷ்யர்களால்தான், பெண்டுகளால் பெரும் எதார்த்தம் கெட்டது, கெட்டது என்று பேர் பரவி விட்டது. இம்முறை தெரிந்த பெண்டுகளால்தான் பெரும் எதார்த்தம் நிலைத்தது, நிலைத்தது என்று நிரூபிக்கத்தான் இச்சபையில் சேர்ந்திருக்கின்றீர்கள். இன்னும் சேரப் போகின்றீர்கள்.

திரேக பேத மிரண்டுமற்று, கருத்தின் கண்ணோடு பார்த்தால், இரண்டிலும் ஆண், பெண் உண்டு.

பெண் சிரோன்மணிகளே! என் சொல்லில் ஆறுய் இருந்துகொள்ளுங்கள். அல்லது தைரிய திடசித்தத்தோடு நிலை நிறுத்துங்கள்.

என் இருதய மலர்களே! இச்சபையில் ஞானதீக்ஷை பெற்று உணர்வு வந்தவுடன் எல்லாமறிந்து கொள்ளும் தன்மை ஏற்பட்டுவிட்டது. மலைப்பு என்? குருக்களுக்கு சிறப்பு சிஷ்யர்களால். சிஷ்யர்களுக்கு சிறப்பு குருக்களால். இவ்விரண்டும் தலை, உடல் போன்றதாகும்.

உதாரணம்: கடல் எல்லா கால்வாய், ஆற்றின் நீரையும் ஆமோதித்து, இடம்தந்து சேர்த்துக்கொள்ளும். பின்பு வந்த ஆற்றுநீரின் மண்டியையும், அதன் குணு நிசய விஷய சுவைகளையும் மாற்றி தெளியவைத்து, நாளடைவில் கடலோடு கடலாய் சேர்த்துக்கொள்ளுகிறது. ஆற்றின் நீரோ கடலடைந்த ஆனந்தத்தால் திரும்புவது இல்லை. மனிதன் என்ற பேர் கொண்டவர்கள் குருவையடைந்தும் சலனமேற்பட்டு திரும்புவதுண்டு. மனிதனுயுள்ளவன் திரும்புவதேயில்லை. ஆறும் கடலும் பின் ஒன்றே. குருவும் சிஷ்யனும் ஏக ஒன்றே. மேலும், சிங்கத்தின் குழந்தைக்கு உடனே தைரியம்உண்டாகி, பாயும் தன்மை ஏற்படுவதில்லை. ஆனால், எல்லா பிராணிகளும் அதன் பாய்ச்சலுக்குப் பயந்தே நடக்கின்றன. வயதும், சமயமும் வாய்க்கும் போதுதான் அது பாய்கின்றது. இராஜனின் குழந்தை தரித்த அன்றைக்கே செங்கோலும் அதன் ஆட்சியும்

அவனிடத்திலே உண்டு. ஆனால், வயதும் அறிவும் வந்த பின்தான் செங்கோலாட்சி புரிகின்றான். உயர் ஞான சபையின் தீட்சை ஈசனாகவுள்ள மனிதனுக்கு ஈசன் நிலையில் நிறுத்துகிறது. அறிவின் பெருக்கத்தால் அவனை அறிந்து கொள்ளும் தன்மையை தவத்தின் வயதால் எல்லா மறிவார்கள். அறிவீர்கள்.

## குருசிஷ்யர்களின் அன்பின் தொடர்பு.

இது மிக அபார வல்லமை உள்ளதாயிருக்கிறது. இது அறியவும் வெகு கால நட்ப அறிவால் அனுபவத்தில் பார்த்தபின் மிக ரகசியமாகவும் உள்ளதாய் இருக்கின்றது. என் இருதயமலர்களில் யாருக்காவது சரீர சம்மந்தத்தில் ஏதோ நோய் உண்டாயிருக்கும் போதும், அவர்கள் பெரும் கவலையில் ஈடுபட்டிருக்கும் போதும், எவ்வளவு தொலை தூரத்தில் இருந்தாலும், அவர்களின் நோவு குருவுக்கு வியாதி பாதிக்காமலே அந்நோவு அவர்களுக்கு எங்கே வலிக்கின்றதோ, அதே இடத்தில் சைக்கினை செய்வது போன்று நோகிறது. அது மிக வல்லமையான விசுவாசமுள்ள சிஷ்யராயிருந்தால், அதிகமாகவே தோன்றுகிறது. அது எதைப்போன்று என்றால், ஒருவன் முன் தெரிந்து அவனைக்காண முற்பட்டால் மறைந்திருப்பதுபோன்றும், நீரில் குமிழிதோன்றி மறைவது போன்றும், இந்த நோவு தோன்றி தோன்றி மறைகிறது. ஜாஸ்தி ஒருவர் கவலையாய் இருக்கும்போது அந்தக் கவலையின் எண்ணத்தால் இருதயம் சிறிது ஆடுகிறது. சிறு நோவும் தோன்றலாம். குருக்களுக்கு அநேக அன்புக்குரிய சிஷ்யர்கள் இருந்தால் இது இன்னு

ருக்கு என்று தெரியவராது. சில சிஷ்யர்கள் இருந்தால் அவர்களுடைய ரூபா ஞாபகமும் வந்துவிடும். இவ்விவரம் அறியாத அன்பின் குருக்கள் ஏதோ உடம்பில் வியாதி என்று நினைத்து மருந்துகளும் சாப்பிடுவார்கள் போலும். அம்மருந்தாலே அவர்களுக்கு வியாதி ஏற்பட்டாலும் ஏற்படலாம். அன்பின் சிஷ்ய விசுவாசமுள்ள குருக்களே இந்த மேலே சொன்ன காரணங்களை அறிந்து கொள்ளுங்கள்.

"என் இருதய மலர்களுக்குக் கவலையுமில்லை, வியாதியுமில்லை".

குறிப்பு:— அன்பான சிநேகிதன், தாய், தந்தை இவர்களுக்கு இத்தொடர்பு சிறிது இருக்கலாம்.

நினைப்பானேன், நினைத்துப் பார்ப்பானேன், பார்த்துப் பகர்வானேன், பகர்ந்து பிடிப்பானேன், பிடித்து கசக்குவானேன், கசக்கி அணைப்பானேன், அணைத்து கசித்திடுவானேன், கசித்து இன்பிப்பானேன், இன்பித்து இன்பித்து தளர்வானேன், தளர்ந்து தரையில் விழுவானேன்.

நினைப்பின் ஏக்கம் தெரியாததால், நினைப்பின் இடம் தெரியாததால், நினைவின் உருவ உணர்வு அடையாததால், நினைவு தன் பேரின்பத்தில் இல்லாததால்தான்.

ஏக்க நினைவின் கசிவான கருவை தன் கடத்தில் ஒப்பற்ற உயர்வின் சிறு இடத்தில் குருவால், அறிவால் பரவிப்பிடித்து ஆக்கினையில் அழுத்தி, அம்பலத்தில் கசக்கி,

இறுத்தி நிறுத்த, கசியாதபேரின்பத்தில் நிலையாய் நிலைத்து, சிற்றின்ப சுகமும் சீராய் நடத்தி, பேரின்ப சுகப்புகழில் இருந்து, மண்ணால் இணைத்த மகத்துவ உடம்பை மண்ணில் விழா மாபெரும் ஐக்கியம் ஆவீர்.

கொடை கொடுக்கும் நெஞ்சமும், பொருளிருப்பிருக்கும் இருகண்ணின் கருணையும், அறிவறிந்தாமோதித்த நன்னடையும், நயவஞ்சக துவேஷமில்லா சொல்லினிமையும், இவையெல்லாம் யாரிடமென்றால், நான் கொண்டென்னை மணந்த என் இருதய மலர்களாகிய மெய்யுணர்வாளர்களிடமே.

சிந்தையை அடக்கி, சிம்மாசனத்தில் ஏறி, சிறப்பாய் அமர்ந்து, சிருஷ்டிக்குக் காரணம் யாரென்று பார்க்க, எல்லா சிருஷ்டியும் என் சிருஷ்டியே என்று அறிந்த சந்தோஷம், எல்லா லோகத்திற்கும் என்பதுடன், இன்று பிரசங்கம் இனிது முடிவுற்றது.

**சந்தோஷம்.**

இராகம்: தாளம்: ஆதி.

பல்லவி.

அமுதுண்ண வருவீரே அன்புகந்து யெம்தந்தை
அருள் விருந்தளிக்கின்றார் (அ)
விருந்துண்ண வருவீரே
விரும்பியே வருவீரெம் குருபரன் அருள்ஞான (அ)

அநுபல்லவி.

உறுபொருளறிந்திட பொருளுடன் இணைந்திட
ஒருமொழி உபதேச உயர்ஞான விருந்தினில் (அ)
மறந்தஎன் பிறவியை அறிந்தறியச் செய்திட்ட
குருபரஞ்ஜோதியருள் பெரும்விருந் தளிக்கின்றார் (அ)

சரணம்.

அமுதுண்ண விருப்புற்ற அறிவினிலுயர்ந்தோரே
அமுதினைத் தேடியே உலகெலாம் அலைந்தோரே
அலைந்து அலைந்துமெய் உலர்ந்துமே அலுத்தோரே
மலையாமல் வருவீரெம் தலைவனின் விருந்தினில் (அ)

பாட்டனார்கள் அருந்திய பரிசுத்த அமுது
பரஞ்ஜோதி தந்தைக்கு படைத்திட்ட அமுது
பக்தர் சித்தர் முத்தர்க்கும் உதவும்எம் அமுது
பலபல சுவையுடன் விளங்கும்எம் அமுது (வி)

பலபேர்கள் அருந்திட அலைந்திடும் அமுது
பலநாளாய்த் தேடியும் காணாத அமுது

பலபிணிகளைப் போக்கும் மருந்துளம் அமுது
பலகுணக் குறைகளை ஒழிக்கும் எம்அமுது (வி)

அதிக இனிமையுடன் அமைந்தஎம் அமுது
அறிவுடை யோர்களுக்கே பொருந்தும்எம் அமுது
அருந்திய வர்களுக்கு இனிக்கும்எம் அமுது
அருந்த ஆசையுள்ளோரை அழைக்கும்எம் அமுது (வி)

தேடித் தேடியே திகைத்துத் திகைத்துமெய்
வாடி வாடியே வருந்தி வருந்தியே
கோடி கோடியாய்த் தேடிய பொருள்களை
ஓடி ஓடியே கொடுக்கும்என் தந்தையின் (வி)

திருவருள் பெருக்கத்தால் தேடிய பொருள்களை
வரும்அறிஞர் கட்கெல்லாம் வழங்குகிறார் என்தந்தை
வருவீர் வருவீர்என்று எதிர்நின் றழைக்கின்றார்
பெறுவீர் பெறுவீர் என்று பிரியமாய் வழங்குகிறார் (அ)

மெய்யுணர்வாளர்: V. சுப்ரமணியம்.

**சந்தோஷம்.**







பரஞ்ஜோதி மஹான் அருளிய

"எந்நூலுக்கும் இந்நூலே மூலம்" என்ற

உயர்ஞான நூலில்

1. ஒருமொழி.
2. பேரறிவு.
3. பரஞ்ஜோதி.
4. ஞானக்கண்.
5. ஆதியும் உலக இணைப்பும்.
6. ஆறுதாரமும் அமிர்தமும்.
7. பூதலோகம்.

அச்சில் :—

1. உணர்வும் தவக்கனலும்.
2. நடந்ததெல்லாம் நன்மைக்கே.
3. சந்தோஷம்.

நம் சபை புத்தகங்கள் கிடைக்குமிடம்:—

பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை,
நெ. 1, மேல வடம்போக்கித் தெரு, மதுரை.

பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை,
33, கும்மாளம்மன்கோயில் தெரு,
தண்டையார்பேட்டை, சென்னை.
ஷை சபை, நெ. 1, பில்கிங்டன் ரோடு, பெரம்பூர்.
ஷை சபை, நெ. 30, நம்மாழ்வார் செட்டித்தெரு, சூளை.

பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை,
ஜஸானி பவான் மட்டுங்கா, பாம்பே 19.

பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை,
கிழக்கு வீதி, சொக்கலிங்கபுரம், அருப்புக்கோட்டை.
ஷை சபை, வெள்ளக்கோட்டை, அருப்புக்கோட்டை.

பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை,
சின்னாளப்பட்டி, மேட்டுப்பட்டி.

பரிபூரண பரஞ்ஜோதியின் உயர்ஞான சபை,
பெரியகுளம்.